*Nam nāṭu*

*Malar 2, itaḻ 106*

*October 15, 1954*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE : 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்..அண்ணுதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை : புரட்டாசி 29உ வெள்ளி (15—10—54) ★ ★ வெளியூர் : புரட்டாசி 30உ சனி (16—10—54) [இதழ் 106

## புது ஒப்பந்தம் வேலைசெய்கிறது

### இலங்கையிலிருந்து 60,000 பேர் திரும்புவர்

இவ்வாண்டு இறுதிக்குள் மொத்தம் 60,000 இலங்கை இந்தியர், இந்தியாவுக்கு அனுப்பப்படுவார்கள் என்று தெரிகிறது. சமீபத்தில் ஏற்பட்ட புதிய இலங்கை—இந்தியா ஒப்பந்தப்படி 55 வயதடைந்த 30,000 பேர்களுடன், ஏற்கனவே 'கிராஜுடி' பெற்று இந்தியா திரும்பும் 30,000 பேர்களுமாகச் சேர்த்து மொத்தம் 60,000 இந்தியத் தோட்டத் தொழிலாளர்கள் இலங்கையிலிருந்து வெளியேற்றப்படலாம் என்று உத்தியோக வட்டாரங்களிலிருந்து தெரிய வருகிறது.

## பிரெஞ்சிந்திய விடுதலை

### அதிகார மாற்ற ஏற்பாடுகள்

சென்னை, அக். 14—

பிரெஞ்சிந்தியத் திட்டுக்களின் எதிர்காலம் பற்றிய பிரான்ஸ், இந்தியா ஆகிய அரசுகளின் கூட்டுத் திட்டம், பிரெஞ்சிந்தியாவின் நிர்வாகப் பொறுப்புகள் அத்தனையும், இந்திய அரசாங்கத்திடம் ஒப்படைத்து விடுவதற்கான வழி வகைகளைக் கொண்டதாகும்.

அதே நேரத்தில் அந்தத் திட்டுக்களின், பொருளாதார, கலாச்சாரத் தொடர்புகள் தொடர்ந்து நீடிக்கவும் உறுதியளிக்கிறதாம்.

அக்டோபர் 13-ந் தேதியன்று கீழூரில் பிரெஞ்சிந்திய மக்கள் சபை கூடி, பிரெஞ்சுக்காரர்களை வெளியேறச் செய்யும் முடிவை மேற்கொண்டதும், அந்தப் பகுதிகளின் நிர்வாகத்தை நேரடியாக இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளுமாம்.

அங்குள்ள பிரெஞ்சு அதிகாரிகள் எல்லோரும் பிரான்சுக்கு திருப்பி அனுப்பப்படுவதுடன், அவர்கள் இருந்த இடங்களில் இந்திய அரசாங்க அதிகாரிகள் அமருவார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

மக்கள் சபையின் முடிவு வெளிவந்த சிலபல நாட்களிலேயே இந்த அதிகார மாற்றம் நடைபெறும் என நம்பகமாக அறியவருகிறது.

அதிகார மாற்றத்திற்காக, இந்திய அரசாங்கக் கமிஷனர் ஒருவர் நியமிக்கப்படுவார். அவருக்கு உதவியாக, ஒரு பொதுக் காரியதரிசியும், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலும் இருப்பார்கள் எனத் தெரியவருகிறது.

## சீனு - இந்திய வர்த்தக ஒப்பந்தம்

புதுடில்லி, அக். 14—

இந்தியத் துணைக் கண்டமும், சீனமும் இன்று முதன்முதலாக ஒரு வியாபார ஒப்பந்தத்தில் ஈடுபட்டன.

இரண்டாண்டுகள் மட்டும் உயிர் தரப்பட்டிருக்கும் அந்த ஒப்பந்தம், இரு நாடுகளிடையேயும் நிலவுகிற நேசத்தை வளர்க்கவும், சமத்துவம், பரஸ்பர உதவி ஆகிய கொள்கை அடிப்படையில் இரு நாட்டு வணிகமும் வளரச் செய்யவும் பயன்படும் என்ற நோக்கமுடையது என்று சொல்லப்படுகிறது.

இப்புதிய ஒப்பந்தப்படி இந்தியாவிலிருந்து சீனத்திற்கு அரிசி, பயிறு வகைகள், புகையிலை, உலோகக் கனிப் பொருள்கள், இயந்திரங்கள், இயந்திர சாதனங்கள், பஞ்சு நூல் துணிகள், சணல் உற்பத்திப் பொருள்கள், சைக்கிள்கள், மோட்டார் வண்டிகள் ஆகியவை ஏற்றுமதி செய்யப்படுமாம். அதேபோல இந்தியாவிற்கு சீனுவிலிருந்து அரிசி, சோயாமொச்சை, இயந்திரக் கருவிகள், இயந்திரங்கள், காரீயம், தோல் வகைகள், பட்டு, பட்டுத் துணிகள் இவையெல்லாம் இறக்குமதி செய்யப்படும் என்றும் தெரிகிறது.

# லண்டன் துறைமுகத் தொழிலாளர் வேலைநிறுத்தம்விரிவாகிறது

## 6,000 பஸ் தொழிலாளர்கள் திடீர் வேலை நிறுத்தம்!

## வேலைநிறுத்தத்தை முறியடிக்க இராணுவம்!

லண்டன் துறைமுகத்தில் நடைபெற்றுவரும் தொழிலாளர் வேலைநிறுத்தம், சவுத்தாம்ப்டன், கிளாஸ்கோ ஆகிய இரு துறைமுகப் பட்டினங்களிலும் பரவியுள்ளது.

டில்பரி பகுதியில் இதுவரை அமைதியாக வேலை செய்துவந்த 2,500 தொழிலாளர்களும் வேலை செய்ய மறுத்துவிட்டதால், லண்டன் பகுதியில் வேலைநிறுத்தம் செய்துள்ள துறைமுகத் தொழிலாளர்களின் எண்ணிக்கை 35,000-மாக உயர்ந்துவிட்டிருக்கிறது.

சவுத்தாம்டன் துறைமுகத்தில் 2,000 துறைமுகத் தொழிலாளர்கள், லண்டனில் வேலை நிறுத்தம் செய்துள்ளவர்களுக்கு அனுதாபம் காட்டும் வகையில், அடையாள மறியலில் ஈடுபட்டுள்ளதாக சொல்லப்படுகிறது.

நாற்றமடிக்கும் சாமான்களை இறக்குமதி செய்வதற்குக் கூடுதலான கூலி கேட்டு, கிளாஸ்கோ துறைமுகத்தில் வேலை செய்துவந்த 1,000 தொழிலாளர் வேலை நிறுத்தத்தை மேற்கொண்டுள்ளதாகவும், லண்டன் தொழிலாளர் தகராறுக்கும் இதற்கும் தொடர்பு கிடையாது எனவும் சொல்லப்படுகிறது.

வடகிழக்கு இங்கிலாந்தில் உள்ள சண்டர்லாந்து துறைமுகத் தொழிலாளர்கள், வேலை நிறுத்தம் செய்யப்பட்ட இடங்களிலிருந்து கப்பல்கள் சண்டர்லாந்து துறைமுகத்துக்குக் கொண்டு வரப்பட்டால், அவைகளில் உள்ள சாமான்களை இறக்குமதி செய்ய முடியாது எனக் கூறிவிட்டதாகவும் தெரியவருகிறது.

மேற்குறிப்பிட்ட மூன்று துறைமுகங்களிலும் சாமான்கள் இறக்குமதி செய்யப்படாமலே 230 கப்பல்கள் தேங்கிக் கிடப்பதாகவும், மொத்தத்தில் 30,000 தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு இருப்பதாகவும் தெரியவருகிறது.

நிலைமையை சமாளிப்பதற்காக, பிரிட்டிஷ் மந்திரி சபை அவசரமாகக் கூடி, தக்க நடவடிக்கையை மேற்கொள்ளுவது என முடிவு கட்டி இருக்கிறது.

சில இனங்களில் இரண்டு வாரத்துக்குமேல் கப்பலிலேயே தேங்கிக் கிடக்கும் பொருட்களை இறக்குமதி செய்வதற்கு, இராணுவ சிப்பாய்களை உபயோகிப்பது என்பதும் பிரிட்டிஷ் மந்திரி சபையின் முடிவுகளில் ஒன்று என நம்பப்படுகிறது.

துறைமுகத் தொழிலாளர் வேலை நிறுத்தம் ஒரு பக்கம் இருக்க, இருந்தாற்போல் இருந்து, நகர போக்குவரத்து பஸ் தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் செய்யத் துவங்கியுள்ளனர். 63 பஸ் பாதைகளில், போக்குவரத்து நிறுத்தப்பட்டிருக்கிறது. மொத்தத்தில் 6000 தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துள்ளனர்.

## வரட்சியின் விளைவு!

கயா மாநிலத்தில் ஏற்பட்டுள்ள கொடிய வரட்சியின் காரணமாக, நெற்பயிர்கள் பெருமளவுக்குப் பாதிக்கப்பட்டுள்ளன என்றும், இதன் விளைவாக சுமார் ரூ. 3 கோடி நட்டமேற்படலாம் என்றும் தெரிகிறது.

## மின்னல் தாக்குதல்: குடும்பமே பலி

மதுரை, அக். 14—

மதுரை மாவட்டத்தைச்சேர்ந்த பாலக்கோம்பை என்ற கிராமத்தில் ஒரு குடிசையில் வாழ்ந்த குடும்பத்தினர் 4 பேரும், கடந்த செவ்வாயன்று இரவு மின்னலால் தாக்கப்பட்டு மரணமடைந்தார்களாம்! அந்த மின்னல், அவர்கள் வசித்த அந்த ஓலைக் குடிசையையும் சாம்பலாக்கிவிட்டதாம்!

## மேற்கு ஜெர்மனி இராணுவம்

### 1,15,000 இளைஞர்கள் சேர மனு!

மேற்கு ஜெர்மனியின் இராணுவ பலம் பற்றி லண்டன் ஒப்பந்தத்திற்குப் பின்னர் இராணுவத்தில் முன் அனுபவம் இல்லாத 1,15,000 வாலிபர்கள் மேற்கு ஜெர்மனி இராணுவத்தில் சேர மனு போட்டிருக்கிறார்கள்.

தற்போது ஏற்பட்டுள்ள லண்டன் ஒப்பந்தப்படி, மேற்கு ஜெர்மனி, 12 இராணுவ டிவிஷன்களை அதிகமாக ஏற்படுத்தி 4,00,000-பேர் கொண்ட இராணுவத்தை ஏற்படுத்த இருக்கிறது.

# நெடுஞ்செழியன் இலங்கை பயணம்

## விமான நிலையத்தில் தோழர்கள் வழியனுப்பினர்

சென்னை, அக் 14—

திராவிட முன்னேற்றக் கழகத் துணைச் செயலாளர் தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், 14-10-54 பகல் 12 மணிக்கு, 'ஏர் சிலோன்' விமானத்தில் இலங்கைக்குப் பயணமானார்.

சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில், தி. மு. கழகத் தோழர்களும், சென்னை நகர வட்டக் கிளைக் கழகங்களும், ஆலந்தூர் கலை வளர்ச்சிக் கழகத்தினரும், வட சென்னை கே. எஸ். பாண்டியன் படிப்பகத்தினரும் மலர் மாலைகள் சூட்டினார்கள்.

வழியனுப்பி வைக்கும் நிகழ்ச்சியில், தோழர்கள் மு. கருணாநிதி, கே. ஆர். இராமசாமி, கே. எம். கண்ணபிரான், கே. ஆர். சம்பந்தம், எம். எஸ். முத்து, டி. வி. நாராயணசாமி, மு. புரட்சிமணி, செங்குட்டுவன், ஆர். பாரி, நாகூர் அனீபா, காஞ்சி-மணிமொழியார், சிதம்பரம், இராம. வெள்ளையன் (தேவகோட்டை), கிருஷ்ணன் (வேலூர்), பஞ்சு, கே. ஆர். ராஜு (கொழும்பு), வி. எம். ஜான் (நாகர்கோவில்), காசிலிங்கம், அ. பொன்னம்பலனார், கே. பிணகபாணி, கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், திருமதி டி. ஏ. மதுரம், கோ. இறைமுடிமணி முதலியவர்களும், மற்றும் பல கிளைக் கழகத் தோழர்களும், நண்பர்களும் பெருந்திரளாகக் கலந்து கொண்டனர்.

தோழர்கள் : அ. பொன்னம்பலனார், மு. கருணாநிதி, கே. ஆர். இராமசாமி ஆகியவர்களும், சென்னை மாவட்ட தி. மு. கழகச் சார்பில் கே. எம். கண்ணபிரானும் மலர் மாலைகள் சூட்டினர்.

தோழர் : இரா. நெடுஞ்செழியன் அவர்கள் எல்லோரிடமும், மகிழ்ச்சியுடன் விடைபெற்றுக் கொண்டு இலங்கைக்குப் பயணமானார்.

## வரி வசூலிக்கச் சென்ற போலீசை உழவர்கள் தாக்கினர்!

### உழவர்களிடமிருந்து கள்ளத் துப்பாக்கிகள் பறிமுதல்!

காட்மண்டுவில், அரிகிண்டி என்ற ஊருக்கு அருகில், நிலவரி வசூலிக்கச் சென்ற போலீசாரை, உழவர்கள் சுற்றி வளைத்துக் கொண்டு தாக்கினர் என சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

அவ்வுழவர்களுக்கு எதிராக இராணுவப் போலீஸ் அனுப்பப்பட்டதாகவும், உழவர்கள் வீடுகளைச் சோதித்து அங்கிருந்த கள்ளத் துப்பாக்கிகள் சில கைப்பற்றப்பட்டதாகவும் அதே அறிக்கை அறிவிக்கிறது.

## இணங்கிவிட்டார்!

வியட்நாம் மன்னர் பாவோ—டாய் குறிப்பிட்ட சில நபர்களைத் தமது மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ள நிராகரித்த பிரதமர், இப்போது அதற்கு சம்மதித்திருப்பதாகத் தெரிகிறது.

# செப்புச் சுரங்கத்தில் தொழிலாளர் வேலை நிறுத்தம்

## 20,000 ஆப்பிரிக்கர்கள் ஈடுபட்டுள்ளனர்!

வடரொடீஷியா, அக். 14—

வடக்கு ரொடீஷியாவில் உள்ள செப்புச் சுரங்கத்தில், 20,000 ஆப்பிரிக்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

ஆப்பிரிக்க கட்டிடத் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி வேலை நிறுத்தத்தை மேற்கொண்டனர். அவ்வேலை நிறுத்தம் லாரி டிரைவர்கள், மரம் அறுப்போர், சுரங்கத் தொழிற்சாலை, அலுவலகம், வீட்டுத் தொழிலாளர் முதலிய இடங்களில் எல்லாம் பரவிவிட்டது.

அங்கு வேலை பார்த்துவரும் 50 இந்திய தையல்காரர்களும் வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டுள்ளனர்.

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர்: அண்ணதுரை

சென்னை 15—10—1954 வெள்ளி


# 'அவருக்குப் பிறகு யார்?'

நமது கழக முன்னணி வீரர்கள் ஒவ்வொருவரும், ஒன்றல்ல, இரண்டல்ல, ஒன்பதாயிரம் மேடைகளில், 'பண்டிதருக்குப் பிறகு, அவர் இடத்தை நிரப்ப, காங்கிரசில் யார் இருக்கிறார்கள்?' என இடி முழக்கம் செய்து வந்திருக்கிறார்கள். இப்படி நமது தலைவர்கள் வினவியபொழுதெல்லாம், பெரும்பான்மையான காங்கிரஸ் கட்சியினர், அந்த வினவில் மறைந்துள்ள உண்மையை சிந்திக்காது இருந்தனர்; ஏதோ ஏளனக் கேள்வி என, அலட்சியமாகக் கருதியும் இருந்தனர். நமது தலைவர்களின் சிந்தனைக்கு விருந்தளிக்கும் கேள்வியில் பொதிந்திருக்கும், அச்சந்தரும் உண்மையை உள்ளபடி உணர்ந்து, அதை மற்ற சாதாரண மக்களின் கருத்தில் படாதவாறு, சில காலம் வரையிலாவது இருட்டடித்து வைக்கவேண்டும் என்ற கெடுமதியுடன், அக் கேள்வியைக் கேட்டு கேலி பேசினர்!

துவக்கத்தில் நமது தலைவர்களால் மட்டுமே கேட்கப்பட்ட பொருள் நிறைந்த கேள்வி, சில காங்கிரஸ் விஷமிகள் எதிர்பார்த்ததற்கு மாறாக, இந்தியத் துணைக் கண்டம் முழுதும் எதிர் முழக்கமிடும் கேள்வியாக மாறிப்போய் இருக்கிறது. நாம் கேட்கும் பொழுது மிகமிகச் சாதாரணமானது எனக் காங்கிரஸ் கட்சியினர் பலரால் கருதப்பட்ட கேள்வி, அவர்களுடைய மாபெரும் தலைவர் பண்டித நேருவின் மூளையைக் குடையும் சக்தி வாய்ந்த கேள்வியாகப் போயிருப்பது கண்டு நமக்கு அதிர்ச்சியோ, ஆச்சரியமோ ஏற்படவில்லை. அக் கேள்வி தமக்கு எரிச்சல் மூட்டுவதாக உள்ளது எனப் பண்டிதர் பிரலாபித்திருக்கிறார். ஆனால் நமக்கு, அவருக்கு ஏற்படுவதுபோல் எரிச்சல் ஏற்படவில்லை. அதற்கு மாறாக, இவ்வளவு காலத்திற்குப் பிறகாவது, நமது கேள்வியின் உட்பொருளை பண்டிதர் உணர்ந்துகொண்டு, ஒளிவு மறைவு இல்லாமல், வெளியில் சொல்ல முன்வந்தாரே என்பதை நினைக்கும் பொழுது, நமது மனம் நம்மையும் அறியாமல் பூரிப்படைகிறது.

அக் கேள்விக்குக் கிடைக்கும் பதில் பண்டிதரின் உள்ளத்தைப் பலகாலமாகவே அலைக்கழித்துக் கொண்டு வந்திருக்கிறது என்ற உண்மை அவர் வாய் மூலமாகவே வெளியாகி இருக்கிறது. அக் கேள்விக்குக் கிடைக்குப் பதில், அவருக்கு நம்பிக்கை ஊட்டுவதற்குப் பதிலாக, அச்சத்தையே மூட்டிக்கொண்டு வந்திருப்பதால், அக்கேள்வியால் அவருக்கு எரிச்சல் ஏற்படுகிறது! ஏற்பட்டுள்ள எரிச்சலும் அவரால் தாங்கிக் கொள்ளக்கூடிய கட்டத்தைத் தாண்டிச் சென்று விட்டிருக்கிறது! அந்த எரிச்சல் ஓரளவிற்குள் கட்டுப்பட்டு இருக்குமானால், அக் கேள்வியை இவ்வளவு காலமாகத் தாங்கிக் கொண்டதுபோலவே, மேலும் சில காலத்திற்குத் தாங்கிக் கொள்ள பண்டிதர் தவற இருக்கமாட்டார். ஆனால், அக்கேள்வி ஊட்டும் வேதனையை இனியும் பொறுத்துக் கொள்ள முடியாத அவலநிலை அவருக்கு ஏற்பட்டுவிட்ட நிலைதான், அவ்வேதனையை வெளியில் கொட்டி ஆற்றிக் கொள்ளவும், அவருடைய கட்சியினர் அவர்மீது இரக்கம் கொண்டு ஆறுதல் கூறும் மொழியில், தமது நெஞ்சத்தைக் குளிரச் செய்துகொள்ளவும் பண்டிதர் முன்வந்திருக்கிறார்.

அவருடைய மனவேதனையைப் போக்கும் வகையில், அவருடைய கட்சியாரிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் அனுதாப உரை புற்றீசல் போல் கிளம்பும் என்பதில் ஆச்சரியமில்லை. அவருடைய மனப் புண்ணை, தங்கள் ஆதரவு எனும் மருந்திட்டு ஆற்ற, இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலிருந்தும் பல்லாயிரவர் கிளம்புவர் என்பதும் எதிர்பார்க்கக்கூடியதே!

அவர்கள் தரும் கனிவுரை, அனுப்பும் ஆதரவு வைப்பு, 'பண்டிதருக்குப் பிறகு யார்?' என்ற பொருள் நிரம்பிய கேள்வியால் வெந்துபோன பண்டிதரின் மனம், தற்காலிகமாக மாறி மகிழ்ச்சியடையும் என்பதில் ஐயமில்லை! அந்த மகிழ்ச்சி நீடித்து நிற்காது! நீர்மேல் குமிழிபோல், தோன்றிய அக்கணமே உடைந்துவிடக் கூடியதாகும்!

'பண்டிதருக்குப் பிறகு யார்?' என்ற வினவினால் பண்டிதருக்கு ஏற்பட்டுள்ள வேதனையைப் போக்க, அவர்பால் இரக்கம் கொண்டு பிறர் காட்டும் ஆதரவு, அவருக்கு ஏற்பட்டுள்ள எரிச்சலை சிறிது நேரம் மறந்திருக்க அவருக்குத் துணைசெய்யுமேயல்லாது, அந்த எரிச்சலை அறவே அகற்றி, மீண்டும் அவ்வெரிச்சல் ஏற்படவிடாமல் செய்ய துணை நிற்காது! அவருக்கு ஏற்பட்டுள்ள வேதனையிலிருந்து அவரை மீட்க, அவருக்கு மற்றவர் கூறும் அன்புரை, அவருக்கு வேதனை தருவதற்குக் காரணமாக இருந்த கேள்விக்குத் தரப்பட்ட தக்க விடையாகாது. பண்டிதர் பெற்றுள்ள வேதனையே, அவர்பால் பிறர் காட்டிய பேராதரவிலிருந்து உருவானதாகும்! எனவே, மேலும் அதே முறையை மேற்கொண்டு, அம்முறையினால் தோன்றிய பண்டிதரின் மனப் புழுக்கத்தை மாற்றிவிட முடியும் என நினைப்பது வெறும் பயித்தியக்காரத்தனமாகும்.

'பண்டிதருக்குப் பிறகு யார்?' என்ற ஏக்கந்தரும் ஒரு சூழ்நிலையை சிருஷ்டித்த மாபெருந்தலைவரே, இந்த அலகாபாத் பண்டிதர்தான்! அந்த சூழ்நிலை நல்ல வகையில் மாற்றம் பெற்றுவிடாமல் கண்ணும் கருத்துமாய் வளர்த்து வந்தவரும் அதே கனவான்தான்! எனவே 'பண்டிதருக்குப் பிறகு யார்?' என்ற கேள்வியை, அக் கேள்வி பிறக்கும் நிலையில், இந்தியத் துணைக் கண்டத்தைக் கொண்டு வந்து வைத்துள்ள அவரைப் பார்த்துக் கேட்கப்படும் பொழுது, குற்றம் புரிந்தவர் மன நிம்மதி பெறாது எரிச்சல் கொள்வது போல, பண்டிதரும் எரிச்சல் கொள்வது எதிர்பார்க்கக்கூடிய இயற்கையேயாகும்.

இனி, அந்தக் கேள்விக்குத் தக்க சமாதானம் காணும்வகையில் இந்தியத் துணைக் கண்டத்தின் அரசியல் சூழ்நிலையைத் திருத்தி அமைப்பது என்பதும் கண்டிப்பாக இயலாத காரியமாகும். இக்காரியம் இயலக் கூடியதுதான் என [illegible] லாம் என்றாலும், அந்தக் காரியத்துக் கேற்ற நபராகப் பண்டிதர் ஒருக்காலும் இருக்க முடியாது என்பது உறுதி. அத்தகு குணச்சிறப்பு, அவரிடம் இயற்கையிலேயே கிடையாது என்ற மகத்தான உண்மையைத்தான், அவருடைய வாழ்க்கை வரலாறு மெய்ப்பித்துக் கொண்டு இருக்கிறது!

'பண்டிருக்குப் பிறகு யார்?' என்ற வின, ஒரு தனி மனிதரான பண்டிதருக்கு எரிச்சல் தருவதோடு மட்டும் நின்றுவிடக்கூடியதல்ல; இந்தியத் துணைக் கண்டத்தின் எதிர்கால நிலையை உருவாக்கக் கூடியதாகும்.

அக் கேள்வியால் அவர் அடைந்துள்ள எரிச்சல் முக்கியமானதல்ல! இந்தியத் துணைக்கண்டத்தில் ஏற்பட இருக்கும் விளைவுதான் நமக்கு முக்கியம்!

## மேற்கு வங்கத்தில் மதுவிலக்கு!

### சர்க்கார் கொள்கை விளக்கம்

"மேற்கு வங்க அரசாங்கத்தின் நிதி நிலைகள், உடனடியாகவோ, அன்றி அண்மையிலோ மாநிலத்தில் மதுவிலக்கை அமுல் செய்ய முடியாதவாறு உள்ளன,"

என்று, கலால் இலாகா மந்திரி சியாமபிரசாத் பெர்மன் குறிப்பிட்டார்.

மாநில அரசாங்கங்கள் மதுவிலக்குத் திட்டத்தை அமுல் செய்வது பற்றி தங்கள் கருத்தை அறிவிக்குமாறு மத்திய அரசாங்கம் கோரியிருந்தது; அதற்குப் பதிலளிக்கும் வகையில் மேற்கண்டவாறு குறிப்பிட்டுவிட்டு, 'இந்த மாநிலத்தில் மதுவிலக்கு படிப்படியாக அமுல் செய்யப்படுகிறது; மதுக் கடைகளுக்கான அனுமதிச் சீட்டுக்கள் வெகு குறைவாகவே கொடுக்கப்பட்டிருக்கின்றன; நாளுக்கு நாள் மது அருந்துவோர் தொகையைக் குறைக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டும் வருகின்றன; எனவே, உடனடியாக மதுவிலக்குத் திட்டத்தை மாநிலம் முழுவதும் அமுல் செய்வது சாத்தியமில்லை," என்று குறிப்பிட்டார்.

## இந்தியாவுக்கு 'ஹெரன்' விமானங்கள்

'உ ஹாவிலந்து நிறுவனம்' தயாரிக்கும் 'ஹெரன்' விமானங்களை வாங்க 'இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன்' நிச்சயித்திருக்கிறது. 4 பிரயாணிகள் உட்காரக் கூடிய இவ்விமானங்கள் மணிக்கு 183 மைல் வேகத்தில் செல்லக் கூடியன.

# இந்தியரைத் துரத்துவதற்கு கொத்தலாவலை கூறும் காரணம்!

இந்தியப் பிரதமர் பண்டித நேருவுடன் இலங்கை இந்தியர் பிரச்சினை குறித்துப் பேசி ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு திரும்பிவரும் வழியில், இலங்கைப் பிரதமர் கொத்தலாவலை பம்பாயில் பேசுகையில், "இந்தப் பிரச்சினைக்குக் காரணம், இலங்கை அரசாங்கமோ, சிங்களவர்களோ இந்தியர்களை வெறுக்கிறார்கள் என்பதல்ல; அது, எங்கள் மக்கள் எல்லோருக்கும் வேலை தேடித் தருகிற ஒரு பொருளாதாரப் பிரச்சினையாகும்; இந்த வேலை தேடித் தருகிற பிரச்சினை முடிந்துவிட்டால், உலகமே, பல ஆண்டுகளுக்கு முன்னிருந்த நிலைக்குச் சென்றுவிடுமே; நமக்கு 'பாஸ்போர்ட்'களோ 'வீசா'க்களோ தேவை இருக்காது; நம் இரு நாடுகளிடையேயும் போகவர [illegible] தற்கு எவ்விதத் தடைகளும் [illegible] டுப்பாடுகளும் இருக்க மாட்டா" என்று குறிப்பிட்டார்.

★

## இலங்கை - இந்திய ஒப்பந்தம்

### சில புள்ளி விபரங்கள்

இலங்கையில் உள்ள இந்தியத் தூதுவர், நேரு—கொத்தலாவலை ஒப்பந்தம் நிறைவேறிய கடந்த ஜனவரி மாதத்திற்குப் பிறகு 5,606 பேர்களை இந்தியக் குடிமக்களாகப் பதிவு செய்துள்ளார்.

இவர்களுக்கெல்லாம், இந்தியா வந்து செல்ல பிரயாண அனுமதிச் சீட்டுக் கிடையாது—முன்பு இந்தியக் குடிமக்களாகவும் பதிவுசெய்து கொள்ளாதவர்கள். அவர்கள் எல்லோருக்கும் இந்தியா செல்ல அனுமதிச் சீட்டு இப்போது வழங்கப்பட்டு, எல்லோரும் இந்தியா திரும்பிவிட்டனர்.

இலங்கையிலிருப்பதாகச் சொல்லப்படும் 70,000 பேர்களில், இதுவரை 31,652 பேர்களின் 'பாஸ்போர்ட்'களை தூதுவராலயம் சரிபார்த்திருக்கிறது. இன்னும் 'பாஸ்போர்ட்'களைச் சரிபார்க்கும் வேலை தொடர்ந்து நடைபெறுகிறது.

1949-லிருந்து இதுவரை 1,55,000 பேருக்கு இந்திய 'பாஸ்போர்ட்'கள் வழங்கப்பட்டுள்ளனவாம்.

இவர்களில் சுமார் 70,000 பேர் கடந்த ஐந்தாண்டுக் காலத்தில் இந்தியா திரும்பிவிட்டனராம்.

இத்தகவல்கள் எல்லாம் அதிகாரபூர்வமானவை என்று அறிவிக்கப்படுகிறது.

★

## நாடற்றவர்களுக்குச் சலுகை!

### தேசாய் தரும் புதிய விளக்கம்

கொழும்பு, அக். 13—

"இலங்கைப் பிரதமர் கொத்தலாவலை, அண்மையில் ஏற்பட்டுள்ள புதிய ஒப்பந்தத்திற்குப் பின், பேசுகையில், 55 வயது வரை இந்தியர்கள் வேலை பார்ப்பதற்கு இடையூறு எதும் செய்வதில்லை என்று தந்துள்ள உறுதி மொழி, இப்போதிருந்து, இந்திய அரசியல் சட்டத்தின் 8-ம் பிரிவுப்படி இந்தியக் குடி உரிமை கோருபவர்களுக்கு மட்டும்தான் பொருந்தும்; மற்றப்படி, ஏற்கவே இந்தியப் பிரஜைகளாகப் பதிவு செய்துகொண்டு, 'பாஸ்போர்ட்' வைத்திருப்பவர்களுக்குப் பொருந்தாது,"

என்று இலங்கை இந்தியத் தூதுவர் சி. சி. தேசாய் கருத்தறிவித்துள்ளதாகத் தெரிகிறது.

நாடற்றவர்களாக்கப் படுபவர்களுக்கு சலுகை காட்டுகிறதாகச் சொல்லும் இலங்கைப் பிரதமரின் உறுதிமொழிப்படி, நாடற்றவர் எண்ணிக்கை குறையலாம்; அவர்கள் 55 வயது வரை வேலைபார்த்ததும் 'கிராஜுடி' போன்றவையும் தரப்பட்டு, இந்தியாவுக்கு அனுப்பப்படுவார்களாம்.

எனவே, இந்தச் சலுகை இன்னமும் எந்த நாட்டுப் பிரஜைகளாகவும் பதிவு செய்து கொள்ளாதிருக்கிறவர்களுக்கு மட்டும்தான் பொருந்தும்; அவர்கள் இந்திய அரசியல் சட்டம் 8-ம் பிரிவின்படி இந்தியப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்டால் மட்டுந்தான்," என்றார்.

## உலகிலேயே அதிக மழைபெய்யும் இடம்!

### 'ரிகார்டு' மாறுகிறது

ஷில்லாங், அக். 12—

'மாவ்சின்ராம்' என்கிற, இங்கிருந்து 38 மைல் தொலைவில் உள்ள ஒரு மலைப்பாங்கான கிராமத்தில் இந்த ஆண்டு செப்டம்பர் முடிய 684·23 அங்குல மழை பெய்திருக்கிறது.

இதுவரையில் உலகத்திலேயே அதிகமான மழை பெய்யும் பிரதேசம் என்று கருதப்பட்ட அசாமிய கிராமமான சிரபுஞ்சியில் கூட இதுவரை 641·33 அங்குல மழை மட்டுமே பெய்திருக்கிறதாம். இதனால் இப்போது ஒரு புதிய உலக 'ரிகார்டு' மாவ்சின்ராம் எனும் கிராமத்தில் ஏற்படுகிறது.

இதுவரை உலகம் முழுவதும் பெயர் பெற்ற சிரபுஞ்சியில், ஆண்டுதோறும் சராசரியாக 600 அங்குல மழை பெய்து கொண்டிருக்கிறது.

## பன்னு வைரச் சுரங்கம்

### ரஷ்ய நிபுணர்கள் மதிப்பீடு!

விந்தியப் பிரதேசத்தில் ஆராய்ச்சி நடத்துவதற்கென சமீபத்தில் அழைக்கப்பட்ட 3 ரஷ்ய நிபுணர்களைக்கொண்ட குழுஒன்று, தனது அறிக்கையில், அந்தப் பிரதேசத்தில் சுமார் 750 சதுரமைல் அளவில் வியாபித்துள்ள பன்னு வைரச் சுரங்கங்களை இயந்திர மயமாக்கினால் ஆண்டொன்றுக்கு சுமார் ரூ. 12 கோடி மதிப்புள்ள வைரம் கிடைக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறது.

மேலும் அந்த அறிக்கையில் தரப்பட்டுள்ளதாவது :—

"அச்சுரங்கங்களை பூரண இயந்திர மயமாக்கினால் ஒரு நாளுக்கு மட்டும் சுமார் 1895 காரட் வைரம் எடுக்கவியலும்; ஆண்டொன்றில் 315 நாட்கள் வேலை செய்வதாக வைத்துக்கொண்டாலும், அவ்வாண்டில் மொத்தம் 5,96,295 காரட் வைரம் கிடைக்கும்.

ஒரு காரட் வைரத்தின் விலை ரூ. 200 என மதிக்கப்படும்போது, ஒரு ஆண்டு முழுவதும் கிடைக்கும் வைரத்தின் மதிப்பு ரூ. 12 கோடியாகும்.

இதே விகிதத்தில், இச் சுரங்கங்களிலிருந்து 25 அல்லது 30 ஆண்டுகள் வரையிலும் வைரங்கள் வெட்டி எடுக்கப்படலாம்."

இச்சுரங்கங்களுக்குத் தேவையான இயந்திரங்களை வாங்குவது சம்மந்தமாக ரஷ்யாவுடன் இச் சுரங்கக் கம்பெனி பேச்சுவார்த்தைகள் நடத்திவருவதாகத் தெரியவருகிறது.

## கால்வாய் நீர் தகராறு

### உலக பாங்கியின் கண்டுபிடிப்பு

பாகிஸ்தான் கால்வாய்களிலிருந்து, தங்கள் பக்கம் தண்ணீரைத் திருப்பிக்கொள்ள இந்தியா ஒருபோதும் ஒருதலைப் பட்சமாக நடந்து கொண்டதில்லை என்பது தங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்துவிட்டதென்று உலக பாங்கியின் உபதலைவர் ராபர்ட் கார்னர் தெரிவித்திருக்கிறார்.



## ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ.-வுக்கு வரவேற்பு

அக்டோபர் 8-ந் தேதி பகல் 12-15 மணிக்கு, விழுப்புரத்தில், தோழர் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. அவர்களின் தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டது. தேர்தல் விவரமறிந்துகொள்ள சுற்றுவட்டாரப் பகுதிகளிலிருந்து ஏராளமான மக்கள் திரண்டிருந்தனர்.

தேர்தல் முடிவு தெரிவிக்கப்பட்டு, தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் வெளியில் வந்ததும், கூடியிருந்த திரளான மக்கள் பெருத்த ஆரவாரம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். மலர் மாலைகளும், சரிகை மாலைகளும் கழகத் தோழர்களால் அணிவிக்கப்பட்டு, ஊர்வலமாக அழைத்துச்செல்லப்பட்டார். உழவர் கட்சி அலுவலகம் வந்து சேர்ந்ததும் ஊர்வலம் முடிவுற்று, மக்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டன.

### கடலூர் வருகை

அன்று மாலை 6-30 மணிக்கு, கடலூர் புகைவண்டி நிலயத்தில், அவரை, வழக்கறிஞர் இளம்வழுதி தலைமையில், நகர கழகத்தைச் சேர்ந்த தோழர்களும், மற்றும் எல்லா கிளைக் கழகங்களும், நாடக மன்றங்களும் மற்றும் ஏராளமான மக்களும்கூடி, வரவேற்று, மலர் மாலைகள் சூட்டி, ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். வழிநெடுக இனிப்பும், பழங்களும் வழங்கப்பெற்றன. அவருக்கு ஏராளமான மலர் மாலைகள் சூட்டப்பட்டன. பின்னர் ஊர்வலம், கடலூர் தி. மு. கழக இல்லம் வந்தடைந்தது. கழகக் கட்டிடத்தில், இரவு சுமார் 7-30 மணியளவில், தோழர் சுந்தரம் எம்.சி. தலைமையில் பாராட்டுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. தோழர் இரெ. இளம்வழுதி, தோழர் கோவிந்தசாமியைப் பாராட்டிப் பேசுகையில், அவர் ஓர் கொள்கை வீரர் என்று குறிப்பிட்டார்.

தமக்களிக்கப்பட்ட வரவேற்புக்கும், பாராட்டுதலுக்கும் நன்றி கூறி, தோழர் ஏ. கோவிந்தசாமி பேசுகையில், தான் பெற்ற வெற்றி 'நேர்மைக்கு மக்கள் அளித்த வெற்றி; உண்மைக்கு—ஜனநாயகத்திற்கு மக்கள் கொடுத்த மதிப்பு' என்று குறிப்பிட்டார். மேலும் தமது வெற்றிக்காக உழைத்த எல்லாருக்கும் தமது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டார்.

கூட்டம் முடிவுற்றபின், மீண்டும் அவர், தமது இல்லத்திற்கு, கழகக் கட்டிடத்திலிருந்து ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். வழியில் இனிப்புகளும் பழங்களும் வழங்கப் பெற்றன. மலர் மாலைகள் பல சூட்டப்பட்டன.

# சினிமா பார்ப்பதில் தென்னிந்தியரே அதிகம் செலவிடுகின்றனர்!

## சினிமா பற்றிய புள்ளி விபரங்கள்

புதுடில்லி, அக். 12—

இந்தியாவில் ஆண்டுதோறும் சினிமா பார்ப்பவரின் எண்ணிக்கை 60 கோடி; ஒவ்வொரு இந்தியரும் ஒரு வருடத்திற்கு சினிமாவிற்காகச் செலவிடுவது ரூ. 1—2—0. இந்தியாவில் 3,500-சினிமா 'தியேட்டர்'கள் இருக்கின்றனவாம்; இதற்காக சுமார் 300 படத் தயாரிப்பாளர்கள் சராசரியாக சுமார் 238 படங்கள் தயாரிக்கிறார்கள்.

இந்த முன்னூறு படங்களும், நாட்டின் பல்வேறு பாகங்களிலுமுள்ள 65 ஸ்டுடியோக்களில் தயாராகின்றன.

இந்த சினிமாத் தொழிலில் சுமார் 42 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

1946-ல் 45 படங்கள்தான் பிரதேச மொழிகளில் சராசரியாக வெளிவந்தன; ஆனால், 1953-ல் 163 ஆக அந்த எண்ணிக்கை உயர்ந்துள்ளது.

சினிமா பார்ப்பதில் அதிகமான பணம் யார் செலவு செய்கிறார்கள் என்று தெரிந்துகொள்ள வேண்டுமா?

வருடந்தோறும் ஒவ்வொருவரும் செலவிடும் தொகை :—

| | |
|---|---|
| தென்னிந்தியர் | ரூ. 1—10—0 |
| மத்திய இந்தியர் | ரூ. 1— 6—0 |
| மேற்கு இந்தியர் | ரூ. 1— 5—0 |
| வடமேற்கு இந்தியர் | ரூ. 1— 0—0 |
| வட இந்தியர் | ரூ. 0—15—0 |
| கிழக்கிந்தியர் | ரூ. 0—12—0 |

தென்னிந்தியர்கள்தான் சினிமா பார்ப்பதற்கு அதிகமான பணம் செலவிடுகிறார்கள்.

இந்த சினிமா தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் ஆண்டுதோறும் ரூ. 25 கோடி சம்பாதிக்கிறார்கள்; இத்தொழிலில் சுமார் ஒரு லட்சம் பேர் வேலை பெற்றுள்ளனர்.

## கம்யூனிஸ்டு கட்சி அலுவலகம் சோதனை!

### காரணம் கூற போலீசார் மறுப்பு

மேற்கு ஜெர்மனி கம்யூனிஸ்டு கட்சியின் தலைமைக் காரியாலயத்தை போலீசார் சோதனையிட்டனர். இந்த சோதனை நடவடிக்கையில் கலந்துகொள்ள ஏழு லாரிகள் நிறையப் போலீசார் வந்தனர் என்று தெரிகிறது.

கடந்த உலகப் போருக்குப் பின்னர் இவ்வளவு பெரிய சோதனை நடைபெறவில்லை என்று கூறப்படுகிறது.

கம்யூனிஸ்டு கட்சியின் தலைமை அலுவலகத்தைச் சோதனையிட்டதின் காரணத்தையோ அல்லது யாரேனும் கைது செய்யப்பட்டனரா என்பதையோ போலீசார் கூற மறுத்துவிட்டார்கள்.

மேற்கு ஜெர்மனியின் அரசியல் சட்ட நீதி மன்றம், அடுத்த திங்களில், 'மேற்கு ஜெர்மனியிலுள்ள கம்யூனிஸ்டு கட்சி, அரசியல் அமைப்புக்கு விரோதமானது,' என்று போலீசார் தாக்கல் செய்துள்ள மனுவை விசாரிக்க இருக்கிறது என்று தெரிகிறது.

## இந்திய கண்ணாடித் தொழில்!

### தொழிலாளர்களின் நிலை

புதுடில்லி, அக். 14—

சர்க்கார் தரும் புள்ளி விபரங்களின்படி 1947-ம் ஆண்டிலிருந்து இந்தியாவில் கண்ணாடித் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை அதிகமாகியுள்ளது என்று தெரிகிறது.

1947-ல் இந்தியாவின் 'ஏ', 'சி', பிரிவு மாநிலங்களில் மொத்தம் 180 கண்ணாடித் தொழிற்சாலைகள் இருந்தன என்றும், அவற்றில் 24,652 பேர் வேலை செய்தனர் என்றும் தெரிகிறது.

1952-ம் ஆண்டில், இந்தியாவில், 221 தொழிற்சாலைகள் இருந்தன வென்றும், அவற்றில் 28,440 பேர் வேலை செய்தனர் என்றும் தெரிகிறது.

இவர்களில் 96.6 சதவிகிதம் ஆண்கள் என்றும், 6.5 சதவிகிதம் பெண்கள் என்றும், சுமார் 1½ சதவிகிதம் குழந்தைகள் என்றும் தெரிகிறது.

இத் தொழிலில் ஈடுபடுவோர் கால அளவில் நிரந்தரமாக வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். திறமை பெற்ற தொழிலாளர்களுக்கு சென்னை, பீகார் போன்ற இடங்களில் சம்பள விகிதம் ரூ. 28-லிருந்து ரூ. 60 வரை மாறுகிறதாம்.

நாட்டிலே உள்ள 221 தொழிற்சாலைகளில் 71 சதவிகிதம் தொழிலாளர்களுக்கு வீடு கட்டித் தந்துள்ளதாம்.

இத் தொழிற்சாலைகளில் மருத்துவ நிலயங்கள் வைத்துள்ள தொழிற்சாலைகள் 50 சதவிகிதம் இருக்கலாமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

இத்தொழிற்சாலைகளில் வேலை செய்யும் 28,440 தொழிலாளர்களில், 3,092 பேர்களுக்குத்தான் பிராவிடண்ட் நிதி வசதிகள் உள்ளன என்று தெரிகிறது.

## லியாகத் அலி கொலை: புதிய விசாரணை!

பிரிட்டிஷ் பாதுகாப்பிலாகாவைச் சேர்ந்த சி. டபிள்யூ. ஈ. யுரென் என்பவர், கடந்த 1951 – அக்டோபரில் ராவல்பிண்டியில் பாக். பிரதமராயிருந்த லியாகத் அலிகான் கொலை செய்யப்பட்டது பற்றி அண்மையில் விசாரணை தொடங்குவார் எனத் தெரிகிறது.

அந்த பிரிட்டிஷ் அதிகாரி முன்பு இந்திய போலீஸ் இலாக்காவிலிருந்தபோது, பம்பாய் இரகசிய போலீஸ் இலாகாவின் தலைவராக இருந்தவராம்.

பாகிஸ்தான் அந்த அதிகாரியின் சேவைகளை உபயோகித்துக் கொள்ள இங்கிலாந்து அரசாங்கம் ஒப்புக்கொண்டு விட்டதாம்.

## திட்டங்கள் நிறைவேற புதிய சேனை!

நேபாளத்தில் அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக முன்னாள் இராணுவத்தினரில் 10 லட்சம் பேரைக் கொண்டதொரு புதிய சேனை சர்க்காரால் அமைக்கப்படும் என்றும், ஆள் பலத்தை ஒன்று திரட்டி வெள்ளத் தடுப்பு போன்ற வேலைகளில் அவர்களை ஈடுபடுத்த உறுதி கொண்டுள்ளதாகவும், அம்மாநில போக்குவரத்து மந்திரி அறிவித்திருப்பதாகத் தெரியவருகிறது.

# எலும்பை உலரச் செய்யும் நோய்!

## உ. பி.-யில் 7,000 பேர்களை வதைக்கிறது!

லக்னோ, அக். 14—

மீர்சாபூர் மாவட்டத்தில் ரூ. 35 கோடி செலவில் சர்க்கார் நிர்மாணிக்கும் அணைக்கட்டுமிடமான 'துட்கி' என்னுமிடத்தில், தோல் சம்பந்தமான நோயினால், ஏராளமான மக்கள் துன்புறுகிறார்கள் என்று தெரிகிறது.

'யாஸ்' என்னும் இந்த நோய், தோலின்மீது பரவி, சிறிது சிறிதாக சதைகளை உலரச் செய்து, பின்னர், எலும்புகளையும் உலரச் செய்துவிடுகிறதாம்.

இந்த வியாதியினால் பீடிக்கப்பட்டவர்கள், இறுதியில் செயலற்றுப் போகிறார்கள் என்று கூறப்படுகிறது.

உ. பி. சர்க்கார் சுகாதார இலாகாவின் அறிக்கைப்படி, இந்த நோய் வீடுகளிலுள்ள சிலவகை ஈக்களினால் பரப்பப்படுகிறது என்றும், பீகாரிலும், விந்தியப் பிரதேசத்திலும் இந்த நோய் சில ஆண்டுகளாகக் காணப்படுகிறது.

இப்போது 'துட்கி' நகரில், 7,000 பேர் இந்த நோயினால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இது 'தும்கி' மக்கள் எண்ணிக்கையில் மூன்றரை சதவிகிதமாகும். இவர்களில் பெரும்பான்மையினர் பழங்குடி மக்களாவர்.

சர்க்கார் இந்த நோயினால் பாதிக்கப்பட்டோருக்கு உதவ மூன்று மருத்துவ நிலயங்களை அமைத்துள்ளனர். நோயாளிகளுக்கு இலவசமாக 'பெனிசிலின்' குத்தப்படுவதாகவும், சர்க்காரும், தேசீய மலேரியா ஒழிப்பு இயக்கத்தினரும் 'டி. டி. டி.' மருந்தைப் பயன்படுத்துவதாகவும் தெரிகிறது.

# ராஜஸ்தான் முதல் மந்திரிக்கும் பிரதேச காங்கிரசுக்கும் பிணக்கு

## பதவியை காத்துக்கொள்ள 'ஆச்சாரியார் வேலை'!

புதுடில்லி, அக். 12—

இராஜஸ்தானத்தில் முதல் மந்திரியாக இருப்பவர் ஜேய் நாராயண வியாஸ் என்பவராவார்; அவருக்கும், சட்டசபை உறுப்பினர்களுக்கும், பிரதேச காங்கிரசிற்கும் இருக்க வேண்டிய அளவு மன ஒற்றுமை இல்லை.

இந்த உண்மையை, அ. இ. காங்கிரஸ் தலைவரைச் சந்தித்து, முதல் மந்திரி முறையிட்டுள்ளார்.

தம்மை ஆதரிக்க மறுப்பவர்களைத் திருப்திபடுத்தும் முறையில், சென்னையில் ஆச்சாரியார் செய்தது போன்று, தனது அமைச்சர் குழுவை திருத்தி அமைப்பதின் மூலம், முதல் மந்திரி பதவியில் ஒட்டிக்கொண்டு இருக்க வியாஸ் முடிவு கட்டி இருப்பதாகத் தெரியவருகிறது.

# பஸ் தொழிலை சர்க்கார் ஏற்று நடத்த அரசியல் சட்டம் இடம் தரவில்லை!

## உயர் நீதி மன்றத் தீர்ப்பு

புதுடில்லி, அக். 13—

உத்திர பிரதேசம் முழுமையிலும் பஸ் போக்குவரத்து உரிமையைச் சர்க்காருக்கே ஏகபோகமாக அளிக்கும். உ. பி. சர்க்கார் போக்குவரத்துச் சட்டம், இந்திய அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரண்பட்டுள்ளதென்றும், ஆகவே அது செல்லுபடியாகாதென்றும் தலைமை உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது.

தலைமை உயர்நீதி மன்ற நீதிபதி தமது தீர்ப்பில் மேலும் கூறுகையில் குறிப்பிட்டதாவது :

"நூற்றுக்கணக்கானவர்கள் பஸ் தொழிலையே தங்கள் வாழ்க்கை நலனுக்கு வைத்துக் கொண்டுள்ளார்கள். இவர்களுக்கு நஷ்டஈடு ஏதும் கொடுக்க இந்தச் சட்டம் அனுமதிக்கவில்லை; ஆனால், உ. பி.-யின் இந்தச் சட்டத்தால் அவர்கள் உரிமை பறிக்கப்பட்டுவிட ஏதுவாகும். அதோடு தங்களிடமுள்ள பஸ்களை சுலபமாகவோ, நியாய விலைக்கோ விற்க முடியாமற் போய்விடலாம்."

## சேலம் மாவட்டக் கழகத் தேர்தல்

### தி. மு. கழகத் தோழர் வெற்றி பெற்றார்

சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த எத்தாப்பூர் தொகுதிக்கு நடைபெற்ற மாவட்ட கழகத் தேர்தலில் போட்டியிட்ட தி. மு. கழகத் தோழர் ஆனை முத்து பெருவாரியான ஓட்டுக்கள் பெற்று வெற்றியடைந்தார்.

அவரை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ், கம்யூனிஸ்டு தோழர்கள் தோல்வி கண்டனர்.

வாக்குப் பதிவுகள்

| | | |
|---|---|---|
| ஆனை முத்து | (சுயே) | 3,646 |
| பழனி முத்து படையாச்சி | (காங்) | 3,22 |
| ராமச்சந்திரன் | (கம்யூ) | 2,14 |

## துப்பாக்கிக்கு இரை போட ஆட்சியினர் கெடுபிடி

இந்தியாவில், போர்ச்சுகீசியருக்குச் சொந்தமான பகுதிகளில், நாளுக்கு நாள் இராணுவச் செலவு அதிகரித்துக் கொண்டே வருவதால், கோவாவின் பாதுகாப்பு நிதிக்காக ரூ. 3 கோடி அளிக்கும்படி, கோவா மக்கள், அரசாங்கத்தால் வற்புறுத்தப்படுவதாத்தெரியவருகிறது.

## அரித்துவாரில் இராசேந்திரர்

### கங்கையில் புனித ஸ்நானம்!

இந்திய ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரசாத் அரித்துவார் வந்தபோது அவரை உ. பி. கவர்னர் முன்ஷியும், அகில இந்திய சனாதனதர்ம மகா சபையின் உறுப்பினர்களும் வரவேற்றனர்.

அரித்துவாரில் ஜனாதிபதி இராசேந்திர பிரசாத், பின்னர் பூஜா விழாவில் பங்கெடுத்துக் கொண்டு, ஹார்-கி-பாரி என்னுமிடத்தில் கங்கையில் புனித ஸ்நானம் செய்தார் என்று தெரிகிறது.

# குடும்பப் பொருளாதாரப் பயிற்சி!

## இந்தியப் பெண்களுக்குத் தரப்படுகிறது!

இந்திய யூனியன் அரசாங்கம், 'குடும்பப் பொருளாதாரப்' பயிற்சி தருவதற்காக இந்தியத் துணைக் கண்டத்தில் பல்வேறு பாகங்களிலிருந்தும் ஒரு பெண்கள் குழுவை திரட்டியுள்ளது.

இந்தக் குழுவில் அங்கம் பெறும் பெண்கள், அலகாபாத்திலிருக்கும் விவசாயக் கழகத்தில் நவம்பர் முதல் ஒரு மாதத்திற்கு தொடக்கப் பயிற்சி பெறுவர்.

பின்னர், ஹாவாலி எனுமிடத்தில் 5 வாரங்கள் பயிற்சி பெற்றதும் ஜப்பான் நாட்டில் மூன்று வாரங்கள் பயிற்சி பெறுவர்; அதன் பின்னும், இந்தியாவில் நான்கு மாதங்கள் பயிற்சி அளிக்கப்படுவார்கள்.

தேசீய விஸ்தரிப்புத் திட்டத்திற்குள் அமையும் இந்தப் பயிற்சியை, அமெரிக்கத் தொழில் நுணுக்க கூட்டுறவுக் குழுவும், 'போர்டு' நிறுவனமும் சேர்ந்து நடத்துகின்றன.

கிராம அபிவிருத்தித் திட்டங்களில் பெண்களைப் பங்கு பெறச் செய்வதின் மூலம், கிராமப் பெண்களையும் நல்ல குடும்பம் நடத்தத் தெரிந்தவர்களாக்குகிற கிராம அபிவிருத்தியை பூரணமாக்குவதே இப்பயிற்சியளிப்பதின் நோக்கமாம்.



## ஆந்திராவில் தீண்டாமை ஒழிப்பு

### ரூ. 1,33,000 செலவு

ஆந்திர மாநிலத்தில் தீண்டாமையை ஒழிக்கும் நோக்குடன், அரிசன மாணவர் விடுதிகளில் சாதி இந்து மாணவர்களையும் சேர்த்து படிக்கச் செய்வதற்காக ஆந்திர அரசாங்கம் ரூ. 1,33,000-செலவிடத் திட்டமிட்டிருக்கிறது.

இந்தச் செலவு பூராவும், இந்திய அரசாங்கம் தீண்டாமை ஒழிப்புக்காக ஆந்திர மாநிலத்துக்கு ஒதுக்கியுள்ள ரூ. 1,62,000-த்திலிருந்து செய்யப்படும் எனத் தெரிகிறது.

# 6-வது, 7-வது படிவங்களில் ஆங்கிலத்தில் பாட போதனை!

## டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார் கருத்து

சென்னை, அக். 14—

"வடநாட்டுப் பல்கலைக் கழகங்கள் எவ்விதமாக இருந்தபோதிலும், தென்னாட்டுப் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகளில் ஆங்கிலத்தையே போதனா மொழியாகக் கொள்ள வேண்டும்,"

என்று, சென்னை பல்கலைக் கழக செனட் கூட்டத்தில் திருமதி பீகம் அமிருதீன் கூறியுள்ளார்.

உயர்நிலைக் கல்வி பற்றிய, கல்விக் குழுவின் சிபார்சுகளை அமுல் நடத்துவது பற்றி சென்னைப் பல்கலைக் கழக அகாடமி கல்வி குழு நிறைவேற்றியுள்ள முடிவுகளை ஆதரித்து சென்னைப் பல்கலைக் கழக செனெட் சபை தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

பட்டப் படிப்பின் காலத்தை மூன்றாண்டுகளாக உயர்த்துவது பற்றியும், உயர்நிலைப் பள்ளிப் படிப்பை ஏழு ஆண்டுகளாக்குவது பற்றியும் பலர் ஆதரித்து செனெட் கூட்டத்தில் பேசினர்.

உயர்நிலைப் பள்ளிகளின் கடைசி இரண்டு வகுப்புகளில் போதனா மொழியாக ஆங்கிலத்தைப் பயன்படுத்த வேண்டுமென்றும், அப்போதுதான் கல்வியின் தரம் உயர்ந்து, பட்டப் படிப்பின் நிலையும் உயரும் என்று பலர் எடுத்துக் காட்டினர்.

அதுபோது பேசிய திருமதி பீகம் அமிருதீன், "வடநாட்டில் உள்ள பல்கலைக் கழகங்களில் எது நடைபெற்ற போதிலும், தென்னாட்டில் உள்ள பல்கலைக் கழகங்கள், கல்லூரிகளில் ஆங்கிலத்தையே போதனா மொழியாக நீடிக்க வேண்டுமென்றும், ஆகவே, உயர்நிலைப்பள்ளிகளில் ஆங்கிலத்தின் தரத்தை உயர்த்த வேண்டு" மென்றும் கூறினர்.

டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார் பேசுகையில், சென்னை சர்க்கார் நியமித்துள்ள உயர்நிலைப் பள்ளி கல்விக் குழுவின் மூலமாக உயர்நிலைப்பள்ளிகளில் ஆறுவது, ஏழாவது படிவங்களில் ஆங்கிலத்தை போதனா மொழியாக்கு மாறு சிபார்சு செய்வதுபற்றி, தான் சிந்தித்துக் கொண்டிருப்பதாகக் கூறினர்.

கே. எஸ். இராமசாமி சாஸ்திரி பேசுகையில், உயர்நிலைப் பள்ளிகளில், ஏழாவது படிவத்தில், ஆங்கிலத்தின் மூலமே பாடங்கள் போதிக்கப்பட வேண்டும் என்றும், அப்போதுதான் அடுத்துவருகிற மூன்றாண்டு கால பட்டப் படிப்பிற்குத் தங்களைத் தகுதிபெற்றவர்களாக ஆக்கிக்கொள்ள முடியும் என்றும் கூறினர்.

## என். எஸ். கிருஷ்ணன்—டி. ஏ. மதுரம் நாடகக் குழுவினர் வருகை

★

இலங்கைக்குச் சென்று பல நாடகங்கள் நடத்திய பிறகு கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் நாடகக் குழுவினர், 14-10-54 காலை 11-15 மணிக்கு, சிலோன் ஏர் சர்வீஸ் விமானத்தில் சென்னை வந்திறங்கினர். நண்பர்கள் பலர் அக்குழுவினருக்கு மாலையிட்டு வரவேற்றனர். முதன் முதலில் தோழர் நெடுஞ்செழியன் அவர்கள் மாலையிட்டு வரவேற்றார்.

## கடன் தொகை உயர்வு!

சென்னை 'வீடு கட்டும் கூட்டுறவுச் சங்கங்கள்', வீடுகள் கட்டுவதற்காகக் கொடுக்கப்படும் கடன் தொகையின் உயர்ந்தபட்ச அளவாயிருந்த ரூ. 3000-த்தை 10,000 ஆக உயர்த்த சென்னை சர்க்கார் முடிவு செய்துள்ளதாம்.

அதோடு மாதச் சம்பளம் ரூ 400-ம் அதற்குமேற்பட்டும் வாங்குகிறவர்களுக்கு இந்தக் கடன் பெறும் வாய்ப்பு கிடையாது என்றிருந்த தடையையும் சர்க்கார் நீக்கிவிட முடிவு செய்திருப்பதாகவும் தெரியவருகிறது.

## மதுவிலக்குக் கொள்கை

### பெப்சு எதிர்க்கிறது!

பாட்டியாலா, அக். 14—

வரி விதிப்பு விசாரணைக் குழுவினரிடம், பெப்சு மாநில அரசாங்கம், தங்கள் மாநிலத்தில் மது விலக்கு அமுல் செய்வது விவேகமற்றது எனக் கூறியுள்ளதாகத் தெரிகிறது.

குழுவிடம் அரசாங்கம் தந்துள்ள அறிக்கை ஒன்றில் காணப்படுவதாவது :—

"மத்திய அரசாங்கத்தின் இந்த மது விலக்குக் கொள்கையில் எவ்வளவு நியாயமிருந்தாலும்கூட மதுவிலக்கை அமுல் நடத்தி நடைமுறைக்குக் கொண்டு வருகிற மாநில அரசாங்கங்கள் படும் கஷ்டம் கொஞ்சமல்ல; இத்தகைய செயற்கை வழிகளில் மக்களுக்கு நீதி போதிப்பதற்காக அரசாங்கம் ஏராளமாகப் பணம் செலவு செய்ய வேண்டியுள்ளது.

மதுவிலக்கு அமுல் செய்யப்பட்ட பல இடங்களிலும் மக்கள் தங்களுக்குத் தேவையான மது வகைகளைத் திருட்டுத்தனமாகப் பெற்று சட்டத்தை மீறி வருகிறார்கள் என்பது இரகசியமல்ல; வெளிப்படையாகும்.

மதுவிலக்கை அமுல் செய்கிற மாநிலங்கள், திருட்டுச் சாராயம் காய்ச்சுவதைத் தடுப்பதற்காக ஏராளமாகப் பணம் செலவிட வேண்டியுள்ளது.

எனவே, பெப்சு மாநிலமும் மதுவிலக்குக் கொள்கையைப் பின்பற்றினல் அதன் கலால் வருமானங்கள் பாதிக்கப்படுவது மட்டுமின்றி, திருட்டுத்தனமாகக் கள்ளச் சாராயம் காய்ச்சாமலிருப்பதைக் கண்காணிக்க வேறு செலவு செய்யவேண்டி வந்து, ஒருபெரும் பொருளாதார நெருக்கடி ஏற்படக் கூடும்."

# கல்கத்தா 'மெயிலி'ல் மாணவர்-பிரயாணிகள் குஸ்தி!

## சங்கிலியைப் பிடித்திழுத்து வண்டி நிறுத்தப்பட்டது!

## போலீசார் தலையிடு! பலருக்குக் காயம்!

சென்னையிலிருந்து, கல்கத்தா செல்லும் 'மெயில்' வண்டி கோதாவரிக்கு அருகில் உள்ள கோவூர் எனும் இடத்தில் மாணவர்களால் நிறுத்தப்பட்டு, 2 மணி நேரம் தாமதமாயிற்று.

காசி பல்கலைக் கழக மாணவர்கள் வண்டியின் ஒரு பெட்டியில் உட்கார்ந்திருந்தனர். அந்தப் பெட்டியினுள் நுழைய மூன்று பிரயாணிகள் முயற்சிக்கையில் மாணவர்களால் தடுக்கப்பட்டனர். இரு தரப்பினரும் சொல்பிரயோகம் செய்து கொண்டிருக்கையில், மாணவர்கள் தங்கள் வண்டியில் ஏற முற்பட்ட அந்தப் பிரயாணிகளைத் தாக்க ஆரம்பித்தனர். அதற்குக் காரணமாக, தாங்கள் இருந்த பெட்டி தங்களுக்கென 'ரிசர்வ்' செய்யப்பட்டதென்று சொன்னார்கள்.

இந்தக் குழப்பத்திலும், அடிதடியிலும் பிரயாணி ஒருவரின் மூக்குக் கண்ணாடி உடைந்தது; கைக் கடிகாரம் சுக்குநூறாகச் சிதறியது என்றும் தெரிகிறது.

இதைக் கண்டு பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த பிரயாணிகள் ஆத்திரமடைந்தவர்களாய், மாணவர்கள் மன்னிப்புக்கோர வேண்டுமென்றனர்.

மாணவர்கள் மன்னிப்புக் கேட்பார்களா என்ன? மறுத்துவிட்டார்கள்.

பிரயாணிகள் கோபம் கொண்டு, மாணவர்கள் உட்கார்ந்திருந்த பெட்டி மீது கல் மாரிபொழிய ஆரம்பித்தனர்.

நிலைமை கட்டுக்கடங்காது போகவே, இராஜமகேந்திரத்திலிருந்து போலீசார் வரவழைக்கப்பட்டனர். அவர்கள் தலையிட்டதின் பின், மாணவர்கள், தங்கள் உபதலைவர் முகர்ஜி என்பவர் மூலமாக மன்னிப்புக் கோரினர்.

பிறகு வண்டி 12-30 மணிக்குப் புறப்பட்டது.

வண்டி புறப்படுகையில் இரண்டு பிரயாணிகள் அந்த மாணவர் பெட்டியிலேயே ஏறிவிட்டனர்; மாணவர்கள், உடனே, சங்கிலியை இழுத்து ரயிலை நிறுத்தினர்.

மாணவர்களும், அந்தப் பிரயாணிகளும் நேரடியாக, அடிதடிச் சண்டையிலும் ஈடுபட்டனர்; அதனல் பலருக்குக் காயம் ஏற்பட்டது.

காயம்பட்டவர்களில் கோவூர் தாலுக்கா காங்கிரஸ் கமிட்டி அமைப்பாளரான பானுமூர்த்தி என்பவரும் ஒருவராவர் என்று தெரிகிறது.

## 111 கடற் கொள்ளை நிகழ்ச்சிகள்!

### தேசியச் சீனுவின் தாக்குதல் பற்றிய விபரம்!

தேசியச் சீன சர்க்கார் 1949 செப்டம்பர் முதல் 1954 அக்டோபர் வரையில் உள்ள காலத்தில் 111 தடவைகளில் கடற் கொள்ளை போன்று அத்துமீறி நடந்துகொண்டு 67 வெளிநாட்டு வியாபாரக் கப்பல்களைத் தாக்கியும், குண்டுமாரி பொழிந்தும் சீனக் கடல் ஓரங்களிலும், நடுக்கடலிலும் தவறுகள் இழைத்திருக்கிறது என்று குடியரசு சீனச் செய்தி நிலையம் தெரிவிக்கிறது.

தேசியச் சீன நடத்திய இந்தக் கடற் கொள்ளையில் அமெரிக்க ஆதிக்கம் கொண்ட [illegible]களும் கலந்து கொண்டன என்று மேலும் குற்றம் சாட்டியுள்ளது.

தேசியச் சீனவால் தாக்கப்பட்ட வெளிநாட்டுக் கப்பல்களில் 42 பிரிட்டிஷ் கப்பல்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இதுபோல் பனமா, கிரீஸ், நார்வே, டென்மார்க், மேற்கு ஜெர்மனி, இத்தாலி போன்ற நாடுகளின் கப்பல்களும் தாக்கப்பட்டன என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# சென்னையில் அண்ணா பேசுகிறார்

17—10—1954 ஞாயிறன்று மாலை 6 மணிக்கு

இராயபுரம் (2-வது வட்டம்) திராவிட முன்னேற்றக் கழகச் சார்பில்

**மாபெரும் பொதுக்கூட்டம்**

இடம்: பம்பிங் ஸ்டேஷன் தெரு (தலைமைநிலையம் அருகில்)

## கழகக் கூட்டங்கள்

★

**சென்னை (நூனை)**

சென்னை 17-வது வட்டம் தி. மு. க. 4-வது ஆண்டு விழா

17—10—54 ஞாயிறு மாலை

தலைவர் : இராச இரத்தினம்

பேசுவோர் :

ஏ. வி. பி. ஆசைத்தம்பி

எஸ். எஸ். தென்னரசு

ஏ. கே. வில்வம்

★

**புதுவை**

தி. மு. கழக திறப்பு விழா

எண். 191, காந்தி வீதி,

'ஜுபிடர் ஸ்டுடியோ' மாடியில்

17—10—54 மாலை 5 மணிக்கு

விழாத் தலைவர் : ச. சிவப்பிரகாசம்

கொடியேற்றுபவர் : இரா. நக்கீரன்

கழகத் திறப்பாளர் : சே. கோவிந்தராசன்

★

**திருச்சி**

தேவர் மன்றத்தில்

திருச்சி மாவட்ட மாணவர் தி. மு. க. 4-வது ஆண்டு விழா

17—10—54 காலை 9 மணிக்கு

பேசுவோர் :

க. அன்பழகன்

இரே. இளம்வழுதி

பன்னீர்செல்வம்

பூங்கோதை

★

**பாலக்காடு**

கோட்டை மைதானத்தில்

17—10—54 மாலை 6 மணிக்கு

தலைவர் : கே. பொன்னுசாமி

பேசுபவர் : சி. பி. சிற்றரசு

### பாராட்டுக் கூட்டம்

16—10—54 மாலை 6 மணிக்கு சென்னை, திருவொற்றியூர் [illegible]னதித் தெருவில், தி. மு. கழ[illegible] தோழர் எம். கணபதி, செங்கல்பட்டு ஜில்லா மாதவரம் பிர்க்கா மாவட்டக் கழகத் தேர்தலில் வெற்றி பெற்றதைப் பாராட்டுவதற்காக தோழர் ஆர். நமச்சிவாயம் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெறும். தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி, தோழியர் பூங்கோதை மற்றும் பலர் பேசுவர்.

### 'ஊமைப் பெண்'—நிதி நாடகம்

16—10—54 மாலை 6 மணிக்கு சென்னை, தியாகராயர் கல்லூரி வெளி அரங்கில், பி. இராமசுவாமி (செட்டியார்) நினைவு நிதிக்காக, தியாகராயர் நாடகக் கழகம் அளிக்கும் 'ஊமைப் பெண்' நாடகம் பொதுச்செயலாளர் அண்ணாதுரை அவர்கள் தலைமையில் நடைபெறும்.

### 'பரப்பிரம்மம்'-நிதி நாடகம்

16—10—54 அன்று, காட்டுப்பாடி தி. மு. கழக நிதிக்காக, மக்கள் நாடக மன்றத்தாரால், காட்டுப்பாடி இம்பீரியலில் 'பரப்பிரம்மம்' என்னும் நாடகம் நடைபெறும்.

### தோழர் க. அன்பழகன் சொற்பொழிவுகள்

அக். 16 : வேலாயுதம்பாளையம்

" 17 : திருச்சி

" 18 : கன்னிவாடி (திருமணம்)

### தமிழ் இலக்கிய மன்றம் துவக்க விழா

★

16—10—54 மாலை 7 மணிக்கு வேலாயுதம்பாளையம் மலையடிவாரத்தில் மேற்படி மன்றத் துவக்க விழா நடைபெறும். 'இலக்கிய நோக்கம்' என்பது பற்றி தோழர் க. அன்பழகன் விரிவுரையாற்றுவார்.

### சொற் பயிற்சிக் கூட்டம்

★

17—10—54 காலை 10 மணிக்கு சென்னை, முத்தியாலுப்பேட்டை, எண். 17, சாலைவிநாயகர் கோயில் தெரு, முத்தமிழ் மன்றத்தில், தோழர் மு. பெருமாள் தலைமையில், 'தமிழர் விழா' என்னும் பொருள் பற்றி நடைபெறும் சொற் பயிற்சிக் கூட்டத்தில் தோழர்கள் பலர் பேசுவர்.

### இளைஞர் தமிழ் மன்ற சிறப்புக் கூட்டம்

★

17—10—54 மாலை 5 மணிக்கு குடந்தை மீனாட்சித் தியேட்டரில், இளைஞர் தமிழ் மன்ற சிறப்புக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் மு கருணாநிதி, எஸ். எஸ். ராசேந்திரன், டி. வி. நாராயணசாமி ஆகியோர் சொற்பொழிவாற்றுவர். தோழர் நாகூர் ஈ. எம். அனீபா இன்னிசை வழங்குவார். நன்கொடை அணா 8, 4.

### முத்தமிழ் விழா

17—10—54 மாலை 4 மணிக்கு திருப்பூர் - பல்லடம் ரோடு, சந்தைப்பேட்டை ஆபீஸ் திடலில் முத்தமிழ் விழா, தோழர் ஏ. சேனாபதி, எம். எல். ஏ., தலைமையில் நடைபெறும். தோழியர் அருண்மொழி விழாவைத் துவக்கி வைப்பார். தோழர்கள் கண்ணதாசன், கா. அப்பாதுரை, க. அறிவழகன், கண்ணப்பா ஆகியோர் பேசுவர். தோழியர் ஜி. சாந்தகுமாரி குழுவினரின் இன்னிசையும், 'ஆண்டவன் எங்கே?' என்னும் நாடகமும், மற்றும் பல சிறப்பு நிகழ்ச்சிகளும் உண்டு.

### குறள் நெறி விழா

சென்னை நுங்கம்பாக்கத்தில், அக்டோபர் 23, 24, 25, 26, 27-ந் தேதிகளில் 'குறள் நெறி விழா' கொண்டாடப்பெறும். விழாவின் முதல் நாளன்று காலை மாபெரும் ஊர்வலமொன்றும், நாள்தோறும் தமிழ்ப்பெரும் புலவர்கள், மக்கள் தலைவர்கள் ஆகியோரின் சொற்பொழிவு நிகழ்ச்சிகளும், மாலை தோறும் இன்னிசை அரங்குகளும், இரவில் மணிவண்ணன் குழுவினரின் ஓரங்க நாடகங்களும், கடைசி நாளில் (27—10—54) பெரு நாடகம் ஒன்றும் நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

### நகர இளைஞர் கழகம்

16—10—54 மாலை 6 மணிக்கு சென்னை, சூளை நகர இளைஞர் கழகத்தில், தோழர் கே. பி. கலியாண சுந்தரம் தலைமையில், 'ஆரோக்கிய திட்டம்' என்பது பற்றி தோழர் டி. எஸ். சுப்பிரமணியம் பேசுவார்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.

